[7th February 1959

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

MR. CHAIRMAN : Questions are over.

**[*Note.*—An asterisk(*) at the commencement of a speech indicates revision by the Member.]**

## II.—POINT OF INFORMATION *re* SCARCITY OF KEROSENE IN MADRAS STATE.

* VIDWAN T. MUTHUKANNAPPAN : Mr. Chairman, Sir, on a point of information. I have given notice of a motion some five days ago under rule 41 (1) of the Council Rules, calling attention to a matter of urgent public importance, viz., scarcity of kerosene in the State of Madras. I do not know what has happened to it.

MR. CHAIRMAN : That matter has been referred to the Minister concerned. As soon as a reply is received from him, it will be given in the House.

THE HON. SRI C. SUBRAMANIAM : Now that this matter has been raised, I may inform the House that the import cut has been removed now and that hereafter there would not be any scarcity of kerosene. So, I do not think there is any necessity to pursue this matter.

MR. CHAIRMAN : So, the hon. Member is not pursuing the matter?

VIDWAN T. MUTHUKANNAPPAN : No, Sir. I am not pursuing the matter.

## III.—DISCUSSION ON THE GOVERNOR'S ADDRESS—*cont.*

MR. CHAIRMAN : Now we will continue the discussion on the Governor's Address. Sri Gajapathy Nayagar will now speak.

*SRI A. GAJAPATHY NAYAGAR : மன்றத் தலைவர் அவர்களே, நமது கவர்னர் பெருமான் ஆற்றிய உரையை நன்றாகப் பரிசீலனை செய்யும் போது, சில முக்கியமான கருத்துக்களை அவர் எடுத்துரைத்திருக்கிறார். அவைகளை நாம் கவனிக்கவேண்டிய நிலையிலே இருக்கிறோம். முதலாவதாக நான் சொல்லுவேன்: நமது கவர்னர் பெருமான் நமது நாட்டின் தலைவர். ஒரு கட்சி அதாவது காங்கிரஸ் கட்சி தேர்தலில் நின்று ஜெயித்து வந்தால், அந்தக் கட்சி ஆளும் திறமையைப் பெறும். அந்தக் கட்சிக்கு ஆளும் திறமையை அவர் கொடுப்பார். ஆனால், அவரைக் காங்கிரஸ் கட்சித் தலைவர் என்று கருதக் கூடாது. அவரை நாட்டுத் தலைவர் என்று கருதவேண்டும். அவர் நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்து விஷயங்களை ஆராய்ந்துகொண்டு வருகிறார். ஏதாவது குறைகள் இருந்தால், அவர்களை அணுகி, சொல்லவேண்டிய பிரச்னைகளைச் சொல்லி அவர்களோடு கலந்து பேசலாம். நமது கவர்னர் பெருமான் ஒரு ராஜ்யத்தில் முதல் அமைச்சராக இருந்து, நல்ல கல்வி பெற்று, அனுபவம் பெற்று நம் நாட்டுத் தலைவராக வந்திருக்கிறார். அவரை நம்முடைய தக்க தலைவராகக் கொள்ளவேண்டும். அவர்கள் உரையிலேயே நிதி அமைச்சர் அவர்கள் வரவு செலவுத் திட்ட உரையின்போது, திட்டத்தின் முன்னேற்றம் குறித்தும், அமைச்சர் அவையின் பொருளாதாரக் கொள்கைகளைப்பற்றியும் விளக்கிக் கூறுவார்கள் என்று கண்டிருக்கிறது. அவர் முதல் முதலில் எடுத்துரைத்த கருத்து என்ன?